REGD. NO. M. 6511 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ ஜனவரியை:10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் — ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 5 | சென்னை: ஆடி 7உ திங்கள் (22—7—57) ★ ☆ வெளியூர்: ஆடி 8உ செவ்வாய் (23—7—57) [இதழ் 31

## ஐந்தில் நாலு வடக்கே!

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் ஐந்து புதிய பொறியியல் கல்லூரிகள் திறப்பதற்காக இந்திய அரசாங்கம் திட்டமிட்டுள்ளதாம். அசாமில் ஒன்று; மத்தியப் பிரதேசத்தில் ஒன்று; ஒரிசாவில் ஒன்று; பஞ்சாபில் ஒன்று—ஆக நான்கு கல்லூரிகள் வடக்கிலும் தென்னாட்டில் ஆந்திர மாநிலத்தில் மட்டும் ஒரு பொறியியல் கல்லூரியும் துவக்கப்படுமாம்.

சென்னையைப் பற்றி எந்தத் தகவலும் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இதற்காக ரூ. 10 கோடி செலவிடப்படும் என்று மத்திய கல்வி அமைச்சர் ஆசாத் மக்கள் சபையில் தெரிவித்துள்ளார்.

# சாதி ஒழிப்பு: அண்ணு அறைகூவல்

## 'அடுத்த தலைமுறையில் தாழ்த்தப்பட்டோர் இருத்தலாகாது'

## 'மக்களிடை பெரும் கருத்துப் புரட்சி ஏற்பட்டாக வேண்டும்'

### சென்னை சட்டசபையில் அண்ணு கருத்துரை

"தாழ்த்தப்பட்டவர்கள் முன்னேற்றத்திற்கென பெருந்தொகை செலவிடுகிறேம் என்ற கூற்று, என்னை உற்சாகப்படுத்தவில்லை.

"நான் பிரச்சினைக்கு நிரந்தரமான பரிகாரம் தேடவேண்டும் என்பதில்தான் அதிக அக்கறை கொண்டிருக்கிறேன்.

"தாழ்த்தப்பட்டவர் அல்லாத எல்லோரும் அவர்கள் எந்த சாதிக்காரர்களானுலும்—'நாம்தான், தாழ்த்தப்பட்டவர்கள் அனுபவிக்கும் இன்னல்களுக்குப் பொறுப்பானவர்கள்', என்று உணர்ந்தாக வேண்டும். அப்போதுதான், இந்த நாட்டில் சாதி முறைக் கேடுகள் ஒழியும் என்று நாம் நம்பமுடியும்.

"தாழ்த்தப்பட்டவர் பிரச்சினை என்பது ஒரு கட்சிப் பிரச்சினை அல்ல; எந்தெந்தக் கட்சிக்காரர்கள், தாழ்த்தப்பட்டோர் நலனுக்காகப் பாடுபட்டார்கள் என்ற ஆராய்ச்சியில் ஈடுபடுவதை விட்டு, இதை ஒரு 'தேசியப் பிரச்சினை'யாகக் கருதவேண்டும்.

"தாழ்த்தப்பட்டவர்கள் என்ற ஒரு சமூகம், அடுத்த தலைமுறையற்றதாகச் செய்யப்பட வேண்டும்; இந்தத் தலைமுறையோடு, இந்த தாழ்த்கப்பட்டவர் என்ற வேறுபாடு அற்றுப் போகச் செய்யவேண்டும். இந்த இலட்சியத்துடன் நாம் அனைவரும் உறுதியாகப் பாடுபடவேண்டும்.

—என்று அண்ணு அவர்கள், தாழ்த்தப்பட்டோர் முன்னேற்ற மானியக் கோரிக்கை விவாதத்தில் பேசும்போது நேற்று முன்தினம், சட்டசபையில் குறிப்பிட்டார்கள்; அவரது பேச்சின் முழு விபரம் பின்னர் வரும்.

அண்ணு அவர்கள் மேலும் பேச்சையில் குறிப்பிட்டதாவது:

"மக்களிடை ஒரு பெரும் மனமாற்றம்—கருத்துப் புரட்சி ஏற்பட்டாலன்றி நாம் விரும்புகிற இலட்சியத்தை, எவ்வளவு தொகை செலவிட்டாலும் அடைய முடியாது.

"ஒவ்வாரு வகுப்பைச் சேர்ந்தவர்களும் சாதி உணர்வு கொண்டவர்களாகவே இருக்கின்றனர். ஒவ்வொரு தேர்தலின்போதும் இந்த சாதி உணர்வு தலைகாட்டுகிறது; பலருக்கு ஓட்டுப் பெற்றுத் தருகிறது.

"நான் கனவு காண்கிறேன்—பல கனவுகள் காண்கிறேன்; அதில் ஒன்று, தாழ்த்தப்பட்டவர்களும் இதரரும் ஒன்ருகச் சேர்ந்து, தோள் கோர்த்து நாட்டில் நடமாட வேண்டும் என்பது! 'ஆண்டவன் எத்தனையோ அற்புதங்களைச் செய்ததாகக் கூறுகிருர்களே, இந்த அற்புதத்தைச் செய்யமாட்டாரா?'—என்றும் கனவு காணுகிறேன்.

"கலப்புத் திருமணம் பற்றிப் பலர் பேசினுர்கள்.

"நான், திருமணம் செய்து கொள்ளும் நிலையைத் தாண்டி விட்டேன்; ஆனல் காமராசர் இன்னும் மணம் செய்து கொள்ளாதவராகவே இருக்கிருர். அவர் ஒரு தாழ்த்தப்பட்ட பெண்ணை மணம் செய்து கொண்டு, வழிகாட்டலாம்; நாடு முழுதும் இந்தச் சம்பவம் ஒரு பெரும் உணர்ச்சியைக் கிளப்பி விடும். பலரும் மகிழ்வர்.

"ஆனல் இந்தக் கலப்புத் திருமணங்கள் மட்டும் பிரச்சினைக்குப் பரிகாரமாகி விடாது? இந்தத் திருமணங்களுக்கு முன்பாக, மக்களிடத்தில் தகுந்த மனமாற்றம் ஏற்படச் செய்ய வேண்டும். இல்லாவிட்டால், 'இந்த திருமணத்தால் பிறக்கும் குழந்தைகளும் இழிவாக நடத்தப்படுவர்; புதிய சாதி ஒன்று தோன்றிவிடும்"

## ஆக. 15-ந் தேதி முதல் வேலை நிறுத்தம்!

### அ. இ. இரயில்வே நிலைய அதிகாரிகள் சங்க முடிவு

புதுடில்லி, ஜூலை 22—

தங்களுடையே அதிகச் சம்பள கோரிக்கை, மற்ற வசதிகள் போன்றவற்றை கவனிக்கப்படவில்லையாளுல், ஆக. 15-ந் தேதியிலிருந்து வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவதென அ. இ. ஸ்டேஷன்—மாஸ்டர்கள், உதவி ஸ்டேஷன்—மாஸ்டர்கள் சங்கம் முடிவு செய்திருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. இது சம்பந்தமான முன்னறிவிப்பு ஆக. 3-ந் தேதி யன்று தரப்படுமெனத் தெரிய வருகிறது.

## கருணுநிதி தலைமையில் விவசாயிகள் தூதுக் குழு அமைச்சரைச் சந்தித்தது

### நங்கவரம் பகுதி நிலைமை விளக்கம்

### உடனடியாகக் கவனிப்பதாக விவசாய அமைச்சர் உறுதிமொழி

சென்னை, ஜூலை 22—

குளித்தலை வட்டாரம் நங்கவரம் பகுதியில் ஆயிரத்துக்கு மேற்பட்ட விவசாயப் பெருங்குடி மக்களை நிலத்தில் இறங்கக் கூடாதென்றும், அப்படி இறங்குவதாயின், 'கூலிகளாக வேலை செய்கிறேம்' என்று எழுதிக்கொடுத்துவிட்டுத்தான் இறங்கவேண்டுமென்றும் நிலப்பிரபுக்கள் வலியுறுத்துவதோடு இதுவரையில் விவசாயிகளாக இருந்தவர்களை ஒதுக்கிவிட்டு, சொந்தக் கையாட்களை வைத்து சாகுபடி செய்ய முற்பட்டு, நியாய வாரச் சட்டத்தில் உள்ள 'கோணல்'களைப் பயன்படுத்திக்கொண்டு, கழனியில் இறங்கி வேலை செய்யத் துவங்கிய விவசாயிகளையும் கைது செய்கிற அளவுக்கு நிலைமை வளர்ந்து, விவசாயிகளும் அவர் தம் எருதுகளும் போலீசாரால் கைப்பற்றப்பட்டு, அவர்கள் மீதும் வழக்கு பதிவு செய்யப்பட்டிருக்கிறது.

அமைதிக்குப் பங்கம் ஏற்படக் கூடிய சூழ்நிலைகள் உருவாகிறதை விளக்குவதற்காக, திருச்சி மாவட்டத் தி. மு. கழகச் செயலாளர் அம்பில்-தர்மலிங்கம் அவர்களும், குளித்தலை வட்ட விவசாயிகள் முன்னேற்ற சங்கத் தலைவர் தி. வி. முத்துகிருஷ்ணன் அவர்களும் விவசாயிகள் முன்னேற்ற சங்கச் செயலாளர் கவுண்டம்பட்டி-முத்து அவர்களும் சென்னை வந்து, அண்ணு அவர்களையும், தோழர் மு. கருணுநிதி அவர்களையும், கலந்து, அதன் பிறகு இன்று காலை 11-15 மணிக்கு, தோழர் மு. கருணுநிதி தலைமையில் தோழர்கள் ஏ. கோவிந்தசாமி எம்.எல்.ஏ., அம்பில்-தருமலிங்கம், தி. வி. முத்துகிருஷ்ணன், கவுண்டம்பட்டி-முத்து ஆகியோர் அடங்கிய தூதுக்குழு விவசாய அமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்களைச் சந்தித்தது.

அமைச்சரிடம் நங்கவரம்நிலையை விளக்கி, நிலப்பிரபுக்கள் விவசாயிகளை அடிமைகளாகவும் கூலிகளாகவும் ஆக்குவதற்காக எடுத்துக் கொள்கிற முயற்சிகளை விவரித்து, பாதிக்கப்படுகிற விவசாயிகளை உடனடியாகப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு அரசாங்கத்தினுடையது என்றும், இல்லையேல், அமைதிக்குப் பங்கம் விளையக் கூடிய சூழ்நிலைகள் உருவாக ஏதுவாகுமென்றும் கூறப்பட்டது.

நிலவெளியேற்ற தடைச் சட்டத்தை அங்கு சரிவர அமுலாக்குவதற்கு ஒரு இடைக்கால உத்திரவு உடனடியாகப் பிறப்பிக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொள்ளப்பட்டது.

அமைச்சர் அவர்கள் நிலைமையைக் கவனமாகக் கேட்டு, உடனடிப் பரிகாரம் தேட முயலுவதாகவும், வரும் 28—7—57 ஞாயிறன்று திருச்சி கல்லணையில் மீண்டும் தூதுக்குழுவினரைச் சந்தித்து ஒரு முடிவு செய்வதாகவும், அன்றையத் தினம் சம்பந்தப்பட்ட அதிகாரிகளையும் கல்லணையில் கலந்து பேசலாம் என்றும் உறுதி கூறியுள்ளார்.

மீண்டும் தூதுக்குழு, தோழர் மு. கருணுநிதி தலைமையில் கல்லணையில் விவசாய அமைச்சரை 28—7—57 ஞாயிறன்று சந்திக்கும்.

## முன்னுள் பிரெஞ்சுப் பகுதிகள் அதிகாரமாற்றம்

### தீமையைவிட நன்மையே ஏற்படுமென அறிவுறுத்தல்

பாரிஸ், ஜூலை 20—

ஏற்கனவே, இந்தியாவில் உள்ள பிரெஞ்சு காலனிகளான பாண்டிச்சேரி, காரைக்கால், மாகி, ஏனும், சந்திரநாகூர் ஆகியவை சம்பந்தமாக, இந்தியாவுடன் செய்துகொள்ளப்பட்ட உடன்படிக்கையை பிரெஞ்சு தேசிய மன்றத்தின் அந்நிய விவகாரக் குழு ஏற்றுக்கொண்டு வாக்களித்தது.

உடன்படிக்கையை ஏற்றுக் கொள்வதை ஆதரித்து 26 வாக்குகளும், எதிர்த்து 15 வாக்குகளும் அளிக்கப்பட்டது.

வாக்கெடுப்புக்கு முன்னர் குழுவினர், பிரெஞ்சு அந்நிய இலாகா மந்திரி பினேயிடம் சென்று கேட்டனர்; அவர் குழு உறுப்பினர்களுக்குக் கூறியதாவது:—

"உடன்படிக்கையை நிறைவேற்றுவதன் மூலம் பிரெஞ்சு—இந்திய உறவு அபிவிருத்தி அடைய ஏதுவாகும். இந்த உடன்படிக்கை நிறைவேற்றப்படுவதன் மூலம், தீமையைவிட நன்மையே அதிகம் ஏற்படும்."

காலிஸ்ட் கட்சித் துணைவர் ரேமண்ட்டுரேனே தீர்மானத்தை எதிர்த்துக் கூறியதாவது:—

"இந்த உடன்படிக்கை சட்ட அமைப்புக்குப் புறம்பானது; அந்தப் பகுதிவாழ் மக்களைக் கலந்து ஆலோசிக்கப்படாமல் செய்யப்படுவதால் இது சர்வதேச சட்ட

(5-ம் கலம் பார்க்க)

## விஷக் காய்ச்சலுக்கு ஆளானேர்!

### தமிழ் நாட்டில் 2,57,529 பேர்

சென்னை, ஜூலை 22—

கடந்த ஜூன் 18-ந் தேதிவரை கிடைத்த கணக்குப்படி, தமிழ் நாட்டில் 2,57,529 பேர் விஷக் காய்ச்சலுக்கு ஆளானுர்கள் என்றும், இவர்களில் 62,056 பேர் சென்னை நகரில் அவதிப்பட்டவர்கள் என்றும் சுகாதார மந்திரி மாணிக்கவேலர் சட்ட சபையில் தெரிவித்திருக்கிருர்.

இரண்டாவது முறையாக இந்த நோய் வருகிறது என்ற செய்தி வெறும் ஆரூடம்தான் என்றும் மந்திரி கூறியிருக்கிருர்.

"இந்தியாவில் வேறெங்கும்விட தமிழ் நாட்டில் மட்டும் அதிகமானேர் பாதிக்கப்பட்டதேன்?"

என்று தோழர் எ. வி. பி. ஆசைத்தம்பி கேட்டார்.

"காய்ச்சல் கண்ட பிரயாணிகள் அடங்கிய சிங்கப்பூர் கப்பல் முதன் முதலாக சென்னைக்கு வந்ததே இதற்குக் காரணமாயிருக்கலாம்" என்று மந்திரி பதிலளித்திருக்கிருர்.

## ஆக. 9-ந் தேதிமுதல் வேலை நிறுத்தமாம்!

### 1,500 மத்திய ரெவினியூ இலாகா ஊழியர்கள் முன்னறிவிப்பு?

பம்பாய், ஜூலை 22—

இரண்டாவது ஊதியக் குழு நியமித்தல், பஞ்சப்படி அதிகரிப்பு விசேட விடுமுறை போன்ற தங்கள் கோரிக்கைகளுக்கு ஆக. 2-ந் தேதிக்குள் சர்க்கார் பதில் தராவிடில், ஆக. 9-ந் தேதி முதல் பம்பாயிலுள்ள சுமார் 1,500 மத்திய ரெவினியூ இலாகா சிப்பந்திகள் வேலை நிறுத்தம் செய்யப் போவதாக சர்க்காருக்கு 'முன்னறிவிப்பு' தந்துள்ளதாகத் தெரிய வருகிறது.

## ஒரு இலட்சம் பஸ் தொழிலாளர் வேலை நிறுத்தம்

லண்டன், ஜூலை 22—

ஆறு தொழிற்சங்கங்கள் ஈடுபட்டுள்ள 1 இலட்சம் பஸ் தொழிலாளர்களின் வேலை நிறுத்தம் பிரிட்டனில் 19-ந் தேதி யன்று ஆரம்பமாயிற்று.

அதிகச் சம்பளம் கோரி பஸ் டிரைவர்கள், கண்டக்டர்கள், பழுதுபார்க்கும் தொழிலாளர்கள் ஆகியோரின் இந்த வேலை நிறுத்தத்தால் பிரிட்டன் மக்களின் விடுமுறை கால திட்டங்கள் பெரும் அளவில் பாதிக்கப்பட்டதாம்.

(1-ம் கலத் தொடர்ச்சி)

விதிகளுக்குப்புறம்பானது; மக்கட் பகுதி மாற்றப் படும்பொழுது பொது மக்கள் மத்தியில் "வாக்கெடுப்பு நடத்தியே தீர்மானிக்கப் படவேண்டும்."

நம் நாடு
தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்
சென்னை 22—7—57 திங்கள்

# விந்தை மனிதரின் வம்புப் பேச்சு!
[2]

"இந்தியைப் புறக்கணித்தால் தமிழ்நாடு பின்தங்கிவிடும். மத்திய சர்க்கார் உத்தியோகங்களுக்கு இந்தி தெரிவது அவசியம் என்று கருதப்பட்டால், தமிழ் நாட்டினருக்கு வேலை கிடைக்காமல் போய்விடும்.

"மத்திய சர்க்காரில் உத்தியோகங்கள் வேண்டாம் என்றால் இந்தி படிக்க வேண்டாம்.

"ஆனால், 'இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சிக்காரர்கள் தமிழ் நாட்டின் பெரிய எதிரிகள்' என்று மட்டும் நான் உறுதியாகக் கூறுவேன்.

"இந்தி எதிர்ப்பு இயக்கத்தில் அவர்கள் பிடிவாதமாக இருந்தால், தமிழர்களுக்கு அவர்கள் ஈடுசெய்ய முடியாத நஷ்டத்தை விளைவித்தவர்களாவார்கள்."

இவ்வாறு அமைச்சர், இந்தி மொழி கற்கும் தமிழ் மக்களுக்கு, எதிர்காலத்தில் கிடைக்க இருக்கின்ற மத்திய அரசாங்க உத்தியோகங்கள் குறித்து விளக்கமளித்துள்ளார்.

அதே மூச்சில், 'மத்திய சர்க்காரில் உத்தியோகங்கள் வேண்டாம் என்றால் இந்தி படிக்க வேண்டாம்' என்றும் கூறி, நிதி அமைச்சர் சுப்பிரமணியம், இந்தி எதிர்ப்பில் நியாயமிருக்கின்றது என்பதையும் ஒப்புக்கொண்டுள்ளார்.

தமிழ் மக்கள் மத்திய அரசாங்க உத்தியோகங்களைப் பெற வேண்டும் என்பதிலும், அதற்காக தமிழ் மக்கள் இந்தி கற்றுக்கொள்ளவேண்டும் என்பதிலும், தாம் குறிப்பிட்டுள்ளபடி நிதி அமைச்சருக்கு உண்மையான பெருங்கவலை இருக்குமானால், மத்திய அரசாங்க உத்தியோகங்கள் வேண்டாம் எனக் கருதிக்கொண்டிருக்கின்ற தமிழ் மக்கள் வேண்டுமானால் இந்தி கற்காமல் இருக்கட்டும் என்ற, மாற்று முறை ஒன்று கூறாது இருந்திருக்க வேண்டும். ஆனால், நிதி அமைச்சரோ, மத்திய அரசாங்க உத்தியோகங்களை விரும்புகின்றவர்கள் இந்தி பயின்றுகொள்ளட்டும்—அதை விரும்பாதவர்கள் இந்தி பயிலாது ஒழியட்டும் எனக் கூறுவதின் மூலம், அவர் கூற்றுப்படி இந்தி எதிர்ப்பாளர்கள் செய்கின்ற துரோகத்தை விட, இந்தி மொழிக்கும்—பொதுவாகத் தமிழ் மக்களுக்கும்—குறிப்பாக பின்தள்ளப்பட்டுக் கிடக்கின்றதாகக் கொள்ளப்படும் தமிழ் மக்களுக்கும், அறிந்தோ அறியாமலோ மகத்தான துரோகம் செய்தவராகின்றார் நிதி அமைச்சர் சுப்பிரமணியம்!

அதுவுமன்றி, மத்திய அரசாங்க உத்தியோகஸ்தர்களை விரும்பாத தமிழ் மக்கள் இந்தி கற்க வேண்டாம் எனத் தாமே கூறுவதின்மூலம், இந்தி எதிர்ப்பாளர்களுக்குத் தம் திருநாவால் சூட்டிய 'தமிழ்நாட்டின் பெரிய எதிரிகள்' என்ற அரிய பட்டத்தைத் தம்மையும் அறியாமலே, தமக்குத்தாமே சூட்டியும் கொள்ளுகிறார் நிதி அமைச்சர் சுப்பிரமணியம்!

'மத்திய சர்க்கார் உத்தியோகங்களுக்கு இந்தி தெரிவது அவசியமென்று கருதப்பட்டால்', என்று நிதி அமைச்சர் குறிப்பிட்டுள்ளதின் மூலம், 'இந்திதெரிவது அவசியம்' எனக் தமது ஊழியர்களை மத்திய அரசாங்கம் இப்பொழுதே வற்புறுத்திவருவதையும், அதற்கான விதிகளியற்றிச் செயலாற்றிவருவதையும், தமிழ் மக்கள் அறிவிலிருந்து மறைக்கப் பார்க்கின்றார். எதிர்காலத்தில் தான் அந்த நிலை வரக்கூடும் என்பதுபோல் தமிழ்மக்களுக்கு மயக்கமூட்டுகின்றார் நிதி அமைச்சர்!

மத்திய அரசாங்க உத்தியோகத்தைக் காட்டி தமிழ் மக்களை இந்தி பயிலச் செய்ய வேண்டும் எனக் கூறியுள்ள நிதி அமைச்சர், அதே நேரத்தில் 'இந்தியா ஒன்றாக இருக்கும்வரை இந்தியா முழுவதற்கும் பொதுவான ஒரு தேசிய மொழி அவசியம். இந்தியாவின் எல்லா மாநிலங்களும் இந்தியைப் படிக்க வேண்டும். இந்தி நமது தேசிய மொழி. எனவே எல்லோரும் இந்தியைப் படிப்பது அவசியம்' என்றும் குறிப்பிட்டுள்ளார். இதிலுள்ள முரண்பாடு வெளிப்படையாகத் தெரிகிறது. ஏன், இவ்வாறு முரண்படப் பேசுகிறார் நிதி அமைச்சர்?

மத்திய அரசாங்க உத்தியோகம் கிடைத்தாலும் கிடைக்காமற்போனாலும் தமிழ் மக்கள் 'இந்தி கற்றாக வேண்டியது அவசியம்' என்பது நிதி அமைச்சர் முரண்படும் கூற்றிலிருந்து அம்பலமாகிறது. அம்முரண்பாட்டுடனும் அவர் இருந்துவிடவில்லை.

அதாவது, இந்தி வேண்டுமா, வேண்டாமா என்பதை இறுதியாகத் தீர்மானிக்கின்ற உரிமை சென்னை சட்டசபைக்கு இருக்கின்றதுபோலவும், வேண்டாம் என முடிவுகட்டிவிட்டால், தமிழ் நாட்டைப் பொறுத்த வரையிலாவது இந்தி மொழியைக் கைவிட்டுவிடுவதாக வடநாட்டு இந்தி ஏகாதிபத்தியம் தம்மிடம் மறைமுகமாக எழுத்து மூலம் உடன்படிக்கைச் செய்துகொண்டு இருப்பது போலவும், தமிழ் மக்கள் கருதிக்கொள்ளட்டும் என்ற எண்ணத்தில், 'இந்தி வேண்டுமா, வேண்டாமா என்பதை உறுப்பினர்கள் தீர்மானித்துக்கொள்ளலாம்' என்று நிதி அமைச்சர் திருவாய் மலர்ந்துள்ளார். அவர் முன் கூறிய கூற்றுக்கு இது மற்றொரு முரண்பாடாகும். தம் ஒருவரைத் தவிர, இந்திய அரசியல் சட்ட புத்தகத்தை தமிழ் மக்களில் வேறு ஒருவரும் கண்ணாலும் கண்டிருக்கமாட்டார்கள், காதாலும் கேட்டிருக்கமாட்டார்கள் என்ற நம்பிக்கையில், தம் மனம்போன படியெல்லாம், நிதி அமைச்சர் பேசிவருகிறார்போலும்!

மத்திய அரசாங்க உத்தியோகங்களை விரும்புகின்றவர்கள் இந்தியைக் கற்கத்தான் வேண்டும் எனக் கூறியுள்ள அதே மூச்சில் மத்திய அரசாங்க உத்தியோகங்களை விரும்பாதவர்கள் இந்தி கற்கவே வேண்டாம் எனக் கூறியுள்ளதின் மூலம், இந்தி எதிர்ப்பின் அடிப்படை நியாயத்தைத் தம்மையும் அறிந்தோ அறியாமலோ ஒப்புக்கொண்டுள்ளது போலவே, 'இந்தியாவின் எல்லா மாநிலங்களும் இந்தியைப் படிக்க வேண்டும். இந்தி நமது தேசிய மொழி; எனவே, எல்லோரும் இந்தியைப் படிப்பது அவசியம்' எனத் தாம் கூறியுள்ளதிலும், 'இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சிக்காரர்'களான நம்முடைய எதிர்ப்பின் அடிப்படையில் உள்ள நியாயத்தையும் நேர்மையையும் நிதி அமைச்சர் ஒளிவு மறைவு துளியும் இல்லாமல் ஒப்புக்கொண்டுள்ளார்.

அதாவது, 'தமிழ்நாடு தனியாக இருக்க வேண்டுமென்றால் இந்தியை நிச்சயமாகப் புறக்கணித்துவிடலாம்' எனக் குறிப்பிட்டிருப்பதன் மூலம் தமிழ்நாடு தனித்து இருக்க வேண்டும் என்பதையே தனது உயிர் மூச்சாகக் கொண்டு தீவிரமாகப் பணியாற்றிவரும் நமது கழகம், இந்தி மொழியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்வது நியாயமும் நேர்மையுமாகும் என்பதை நிதி அமைச்சர் திட்டவட்டமாக ஒப்புக்கொண்டவராகிறார். சுதந்திரத் தமிழ்நாட்டை நிர்மாணிக்கத் துடித்துக்கொண்டிருக்கின்ற நமது கழகம், இந்தி கற்றலை முழு மூச்சுடன் எதிர்ப்பதுடன், இந்தித் திணிப்பை மொழி ஏகாதிபத்தியமாகத் தான் கருதும் என்றப் பேருண்மையை நிதி அமைச்சர் தெளிவாகத் தெரிந்திருக்கிறார் என நாம் கொள்ளுவதிலும் தவறில்லை.

இருந்தாலும், 'என்றால்' 'ஆம்' என்ற சொற்களைப் போட்டல்லவா, தமிழ்நாடு தனியாக இருப்பது பற்றியும் இந்தி புறக்கணிக்கப்படுவது பற்றியும் நிதி அமைச்சர் குறிப்பிட்டிருக்கின்றார்; 'தமிழ்நாடு தனித்திருக்கப் போகின்றது—இந்தி கற்க வேண்டிய அவசியம் அதற்கு இல்லவே இல்லை' எனத் திட்டவட்டமாக அவர் குறிப்பிட்டில்லாத பொழுது, நிதி அமைச்சர் பேச்சை நம் கருத்துக்கேற்பப் பொருள் கொள்ளுவது முறையல்லவே எனச் சிலர் நியாயம் பேசக் கூடும். ஆனால், இந்தியா பற்றி நிதி அமைச்சர் குறிப்பிட்டுள்ளதும் நிச்சயமில்லாதுதான் இருக்கின்றது என்பதை அவர்கள் தெரிந்து கொள்ளுவார்களானால், தமிழ்நாடு பற்றிய அமைச்சரின் குறிப்புக்கு நாம கொண்ட பொருளை, அவர்கள் ஏற்றுக்கொள்ளுவர் என்றே நம்புகிறோம்.

'ஆனால் இந்தியா ஒன்றாக இருக்குமவரை இந்தியா முழுவதற்கும பொதுவான ஒரு தேசிய மொழி அவசியம்' இது, நிதி அமைச்சர் கூறிய மணி வாசகம்!

'ஒன்றாக இருக்கும்வரை' என்ற சொற்றொடர், என்றென்றும் இருக்கக் கூடியநிலையை விளக்குவதன்று என்பதை அனைவரும அறிவர். உறுதிப்பாடுடையது எனக்கொள்கிறவர்களும்இருகக முடியாது. ஏற்கனவே ஒன்றாக இருந்ததில்லை—இன்று ஒன்றாக இருக்கிறது—இனி பிரியக்கூடும்—பிரிவதற்கான வாய்ப்பு இருக்கின்றது' என்ற திடமான நம்பிக்கை இருந்தால அல்லது, ஒருவர் 'ஒன்றாக இருக்கும் வரை' என்ற மாறுதலை உள்ளடக்கிய ஐயத்திற்குரிய சொற்றொடரை கூறத் துணியமாட்டார்.

இந்தியா, ஒரே தேசம் எனக் கூறிவருகிறது காங்கிரஸ். இந்தியப் பிரதமர் நேருவும் அதை வற்புறுத்தி வருகிறார் அடிக்கடி. நிதி அமைச்சர் சுப்பிரமணியம்கூட, சில நாளைக்கு முன்—இரண்டு நாளைக்கு முன் தாம செய்த 'தவறை' திருத்திக் கொள்ள முன்வந்தபொழுது, அக்கருத்தை அழுத்தம் திருத்தமாகக் கூறினர்.

இருந்தாலும் நிதி அமைச்சர் மூளையின் ஒரு சிறு மூலையில், அவர் பள்ளியில் கற்ற இந்திய வரலாற்றின் சாரம், அணுவுக்கும் சிறிய அணுவாகத் தேங்கிக் கிடக்கிறது. எனவே, 'இந்தியா ஒன்றாக இருக்கும்வரை' என்ற சொற்றொடரை, தம்மையும் அறியாமல் நிதி அமைச்சர் குறிப்பிட்டுள்ளார் என்றே நாம் தீர்மானிக்கின்றோம்.

இந்தியா ஒரு துணைக் கண்டம்—தமிழ் நாடு, ஆங்கிலேயர் ஆட்சிக்கு முன்வரையில் சுதந்திரத் தனிநாடு—மூவேந்தர் ஆண்டத் திருநாடு—என்ற வரலாற்றை நிதி அமைச்சர் கற்றிருப்பவர்தானே! எனவேதான், 'இந்தியா ஒன்றாக இருக்கும்வரை' என்ற உறுதிப்பாடற்ற சொற்றொடரை நிதி அமைச்சர் தெளிவாகப் பயன்படுத்தி இருக்கின்றார்.

போர் உடன்படிக்கை—வியாபார உடன்படிக்கை போன்ற ஒப்பந்தங்களைச் செய்து கொண்ட இரண்டு தனித்தனி சுதந்திர நாடுகளின் அமைச்சர்கள், தனித்தனியாக தம்தம் நாட்டின் நலம்பற்றி பேசுகின்ற நிலையில் 'உடன்படிக்கை கால கெடுவு வரை' எனக் குறிப்பிடுவது போன்று தான், நிதி அமைச்சர் சுப்பிரமணியமும் 'இந்தியா ஒன்றாக இருக்கும்வரை' எனக குறிப்பிட்டுள்ளார்.

எனவே, தனித் தமிழ்நாடு பற்றியும், இந்தி புறக்கணிப்பது பற்றியும நிதி அமைச்சர் குறிப்பிடுள்ளதை, நாம் மேலே குறிபபிட்டுள்ளபடி பொருள் கொள்ளுவது தவறுடையதல்ல என்பதைக் கூறி நிறுத்துகிறோம்.

# சவ்வாது மலைவாசிகளின் குறைகள்

## அமைச்சரிடம் 325 மனுக்கள் சமர்ப்பித்து எஸ். எம். அண்ணாமலை வேண்டுகோள்

### ஆவன செய்வதாக அமைச்சர் உறுதிமொழி

சென்னை, ஜூலை 20—

சென்னை சட்டசபைக்குப் போளூர் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட கழக உறுப்பினர் திரு எஸ். எம். அண்ணாமலை அவர்கள், 19—7—57-ல், காட்டிலாகா அமைச்சர் பக்தவத்சலத்தை நேரில் கண்டு சவ்வாது மலைவாசிகளின் குறைகளைக் களையுமாறு கோரினார்.

"வடஆற்காடு மாவட்டத்திலுள்ள சவ்வாது மலைவாசிகளின் குறைகளைக் கண்டறிந்து, அவற்றைப் போக்க சென்னை அரசாங்கம் முன்வர வேண்டும்"

என்று அவர் அமைச்சரை வலியுறுத்தியதுடன், சுமார் 325 மனுக்களையும் அமைச்சரிடம் சமர்ப்பித்தார்.

வரும்ஆகஸ்டு திங்களில் தானே நேரில் வந்து சவ்வாது மலைவாசிகளின் குறைகளை ஆராய்ந்து ஆவன செய்வதாக அமைச்சர் உறுதியளித்துள்ளார் என்று தெரியவருகிறது.

# 600 ஆசிரியர்கள் வேலை நீக்கம்!

திருவனந்தபுரம், ஜூலை 19—

வேலை காலி இல்லாமையால் தற்காலிகமாகப் பணியாற்றிவந்த ஆசிரியர்கள் 600 பேர் வரை இந்த ஆண்டு வேலையிலிருந்து நீக்கப்பட்டனர் என்றும், தேவைப்படும்போது அவர்கள் வேலைக்கு எடுத்துக்கொள்ளப்படுவார்கள் என்றும் கேரள கல்வி மந்திரி ஜோசப் முண்டசேரி, சட்டசபையில் தெரிவித்திருக்கிறார்.

# மற்றுமோர் தொழிற் கல்விக் கழகம்

## ஆவடியில் அமையும்

சென்னை, ஜூலை 19—

சென்னையில் மற்றுமோர் தொழில் கல்விக் கழகம் (பாலிடெக்னிக்) திறக்கப்பட இருக்கிறது.

ஆவடியில் இந்த கழகம் அமையும்.

ஏ. எம். முருகப்பா தரும 'டிரஸ்ட்' துவங்கும் இந்தக் கழகம், ஜூலை 31-ந் தேதி முதல் வேலை துவங்கும்.

இதனைத் துவங்க டெல்லி கல்வி—விஞ்ஞான ஆராய்ச்சி இலாகா அனுமதி தந்துள்ளது.

இதுபோல தொழிற் கல்வி நிலயம ஒன்று ஐதராபாத் நகரிலும் டாக்டர் மெல்கோட் எம்.பி. தலைமையில் உள்ள ஒரு 'டிரஸ்ால்' துவக்கப்படவிருக்கிறது.

அதேபோல, பொள்ளாச்சியில், நாச்சிமுத்து தொழில் சங்கத்தவரின் கோரிக்கைப்படி ஒரு தொழிற்கல்வி நிலயம் அமைப்பது பற்றியும் சென்னை சர்க்கார் முடிவு செய்துள்ளனர்; அதற்காகும் செலவில் சரிபாதி தரவும் சம்மதித்திருக்கின்றனர்; ஆனாலும், அந்த நிலயத்தைத் துவக்குவதற்கான மத்திய சர்க்காரின் அனுமதி, இன்னமும் கிடைக்கவில்லையாம்.

கேரள சர்க்காரும், தங்கள் மாநிலத்தில் மேலும் ஒரு தொழிற் கல்வி நிலயம் அமைப்பதற்கு முயற்சிகளை மேற்கொண்டிருக்கின்றனர்.

# கார்களை குறைப்பதற்கு

## நிச்சயமாக வழியிருக்கிறதாம்!

சென்னை, ஜூலை 20—

அரசாங்கத் துறை ஒவ்வொன்றுக்கும் வழங்கப்பட்டுள்ள ஜீப் கார்கள், 'ஸ்டேஷன் வாகன்'கள், சவாரி வான்கள் முதலியன எத்தனை உள்ளன என்பதைப் பரிசீலனை செய்து, அவற்றைக் குறைக்க முடியுமா என்பதைத் தெரிவிக்க நியமிக்கப்பட்ட 'ஜீப்' விசாரணை தனி அதிகாரியின் மேற்பார்வையின்கீழ், ஒவ்வொரு துறையும் தன்னிடமுள்ள கார்களைக் குறைப்பதற்கான தனிக் குழுக்களை அமைக்க அரசாங்கம் உத்தரவிட்டுள்ளது.

மேற்கூறப்பட்டதை விசாரித்துக் கூறுவதற்காக இவ்வாண்டு ஜனவரியில் நியமிக்கப்பட்ட ஜீப் விசாரணை தனி அதிகாரி, அரசாங்கத் துறைகளுக்கு வழங்கப்பட்டுள்ள கார்களைக் குறைப்பதற்கு நிச்சயமாக வழி உள்ளது' என இப்போது அரசாங்கத்திற்கு அறிவித்துள்ளார்.

குழுக்களின் சிபாரிசுகளின் மீது முடிவாகத் தீர்மானிக்கும் உரிமை அரசாங்கத் தலைமை அலுவலகத் துறைகளுக்கே இருக்கும்.

# வாழ்க்கைத்தரப் புள்ளி உயர்ந்துவிட்டதாம்!

## காரணம் பற்றி தகவல்

சென்னை நகரத் தொழிலாளர் வாழ்க்கைப் புள்ளி, 1957 ஜூலை 6-ந் தேதியுடன் முடிவான வாரத்தில் 375-ஆக இருந்தது; முன்னைய வாரப் புள்ளியைவிட இது 2 புள்ளிகள் அதிகம். காய்கறி, மீன், வெற்றிலை இவற்றின் விலை யேற்றமே இதற்குக் காரணம்.



# 'விவசாயிகள் வாழ்வில் வறுமைதான் தாண்டவமாடுகிறது'

## 'பெருநிலக்கிழார்களுக்கு மட்டுமே தரப்படும் கடன்கள் பயன்படுகிறது'

## 'விவசாயிகளைத் திடீரென வெளியேற்றும் அநீதியைத் தடுக்க வேண்டும்'

### சட்டசபையில் தோழர்கள் எம். பி. சுப்பிரமணியம், ஏ.கோவிந்தசாமி, ப.உ. சண்முகம், பி.எஸ் சந்தானம் ஆகியோர் கோரிக்கை

சென்னை, ஜூலை 20—

விவசாய, மீன் வளர்ப்பு இலாகா செலவிற்காக ரூ 2,61,32,000; கால்நடை வளர்ப்பு இலாகாவுக்கு ரூ. 74,92,400; சமுதாய ஸ்தல அபிவிருத்தித் திட்ட வேலைகளுக்கு ரூ 2,76,88,700 மானியமாக அளிக்குமாறு சட்டசபையில், அமைச்சர் பக்தவத்சலம் கோரினார்.

முதல் கோரிக்கைமீது கழக உறுப்பினர் தோழர் ஏ. கோவிந்தசாமி அவர்களும், மூன்றாவது கோரிக்கை மீது கழக உறுப்பினர் தோழர் ப. உ சண்முகம் அவர்களும் வெட்டுப் பிரேரபணைகள் கொண்டுவந்து அரிய யோசனைகளைக் கூறினர்; மேலும் தோழர்கள் பி. எஸ். சந்தானம், எம். பி, சுப்பிரமணியம் ஆகியவர்களும் பல யோசனைகளைக் கூறினர்; அவைகளின் சுருக்கம் இங்கு தரப்படுகிறது:—

### ஏ. கோவிந்தசாமி

வெட்டுப் பிரேரபணையை முன் மொழிந்து தோழர் ஏ. கோவிந்தசாமி அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் விவசாய முன்னேற்றமும், உற்பத்திப் பெருக்கமும் ஏற்படவேண்டும் என்ற நோக்கத்துடன் முடிவுகள் பல செய்யப்பட்டுள்ளன; அதற்கு உடனடியாக அரசாங்கம் நிலச் சீர்திருத்தச் சட்டத்தைக் கொண்டுவர வேண்டும்.

"விவசாயத்தில் முன்னேறி, அதிக உற்பத்தி நிலையை அடைந்துள்ள காஷ்மீர், சீனா போன்ற நாடுகள் இந்த உண்மையை வெகு தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன.

"உடனடியாகச் செய்யவேண்டியவைகள் நிறைய இருக்கின்றன. நீர்ப்பாசன இலாகாவும், விவசாய இலாகாவும் தொடர்புகொண்டு செயல்பட வேண்டும்; பழுது பார்த்து, பாதுகாக்க வேண்டிய நீர்த்தேக்கங்களை அரசாங்கம் கவனிக்க வேண்டும்.

"புறம்போக்கு நிலங்களில் சாகுபடி செய்துவந்துள்ள ஏழைகளை திடீரென வெளியேற்றும் அநீதியைத் தடுக்கவேண்டும். இவ்வாறு வெளியேற்றுவதால் உற்பத்தி வெகுவாகப் பாதிக்கப்படுகிறது.

"விவசாயத்திற்கு அதிக மின்சாரம் தரப்படவேண்டும்; இத்துறையில் தென்னாற்காடு மாவட்டம் வெகுவாகப் புறக்கணிக்கப்பட்டதால் அம்மாவட்டம் பின் தங்கிய நிலையிலிருக்கிறது; எனவே அரசாங்கம், தென்னாற்காடு மாவட்டத்திற்கு அதிக மின்சார வசதியைத் தரவேண்டும்.

"பம்பு செட்டுகள் ஒருசில பணக்காரர்களுக்கு மட்டுமே அதிகம் தருவதைத் தடுத்து, அவைகள் எல்லோருக்கும் கிடைக்குமாறு செய்யவேண்டும்.

"விவசாயிகளுக்கு அவசியமான பொருள்களின் விலைகள் நாளுக்கு நாள் ஏறிக்கொண்டே போகின்றன; இதைக் கட்டுப்படுத்த வேண்டும். அதிலும் எண்ணெய், உரம் ஆகியவைகளின் விலை உயராமல் பார்த்துக்கொள்ள வேண்டும். அளிக்கப்படும் உரம் தவறான முறையில் பயன்படுத்தப் படுகிறது. கடன்கள் வேண்டிய நேரத்தில் கிடைக்காததால் உற்பத்தி பாதிக்கப்படுகிறது. கரும்பு பயிரிடுபவர்கள் தங்களைப் பதிவு செய்து கொள்வதில் நிர்வாகக் கோளாறு உள்ளது; வீண் தாமதம் ஏற்படுகிறது.

"தென் ஆற்காடு மாவட்டத்தில் கூட்டுறவு முறையில் கரும்பு ஆலை ஏற்படுத்தப்பட வேண்டும். என் தொகுதியில் மீனவர்களுக்கு அதிகக் கட்டு மரங்களை வழங்க வேண்டும். கடலூரில் மீன் எண்ணெய் தயாரிக்கும்தொழிற்சாலை ஏற்படுத்தப்பட வேண்டும். ஒரு விவசாயக் கல்லூரியை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஏற்படுத்த வேண்டும். கால்நடைகளுக்கு ஏற்படும் நோய்களைக் குணப்படுத்த நடமாடும் வைத்தியசாலைகள் ஏற்படுவதற்கு வழி செய்யவேண்டும்.

### ப. உ. சண்முகம்

தனது வெட்டுப் பிரேரபணையை முன்மொழிந்து தோழர் ப. உ. சண்முகம் அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"வெட்டுப் பிரேரபணை கொடுப்பது ஒரு சம்பிரதாயம் என்ற முறையில்தான், 'வெட்ட வேண்டும்' என்று கூறுகிறோம். ஆனால் ஒதுக்கப்பட்ட தொகை எவ்வாறு செலவழிக்கப்பட வேண்டும் என்பதை ஆராயவும், அதுபற்றி எங்கள் எண்ணத்தை எடுத்துக் காட்டவும்தான் 'வெட்டுப் பிரேரபணை'யாகும் என்று கூறவிரும்புகிறேன்.

"வெட்டுப் பிரேரபணை கொண்டு வருபவர்கள்—'வெட்டிப் பேச்சு' பேசுபவர்கள் அல்ல என்பதை அமைச்சர் மனதில் கொள்ளவேண்டும்; நாங்கள் பேசுவதைக் கவனித்து பதில்கூற வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

சமுதாய நலத் திட்டத்தின் கீழ் அமைக்கப்பட்டுள்ள 133 இடங்களில் இரண்டு மட்டுமே சொந்த கட்டிடத்திலும், 131 இடங்கள் வாடகைக் கட்டிடங்களிலும் உள்ளன என்பதை வருத்தத்துடன் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

"நகரங்களுக்கே 'பிளாக்' பகுதித் திட்டத்தில் நன்மை ஏற்பட்டு வருகிறது. கிராமங்கள் சரிவர கவனிக்கப்படவில்லை. அதிகாரிகள் கிராமங்களில் உள்ள அலுவலகங்களில் தங்குவதில்லை.

"சமுதாயத்தின் முன்னேற்றத்திற்கு இந்த மூன்று திட்டங்களும் தேவை. அதை நாங்கள் குறைகூறவில்லை; செலவழிக்கப்படும் வழிகள் பற்றியே கூறுகிறோம்.

"மக்கள் போடும் மனுக்கள் கவனிக்கப்படாமல் புரூக் கூண்டில் தூங்குகின்றன. தேசிய விஸ்தரிப்புத் திட்டத்தின்கீழ் அமைக்கப்படும் சாலைகள் எதிர்பார்த்த குறையைப் போக்கி நன்மை தருவதாக இல்லை. 'கூட்டுப் பட்டா' இருந்தால் சலுகைதர மறுக்கப்படுகிறது. தாழ்த்தப்பட்ட மக்களுக்கு கட்டித் தரப்படும் வீடுகள் நிலைத்து நீடித்து நன்மை தருவதாக இல்லை.

"கடன் கேட்க வருபவர்களிடம் கட்டாயமாக கதர் விற்பனை செய்யப்படுவதை தடுத்தாக வேண்டும்.

"என்னுடைய தொகுதியில் செங்கம் தாலுகா மிகவும் பிற்போக்கான நிலையில் உள்ளது அதை ஸ்தல அபிவிருத்தி திட்டத்தின் கீழ் பயன்பெறுமாறு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்."

### பி. எஸ். சந்தானம்

தோழர் பி.எஸ். சந்தானம் அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"இந்நாட்டில் விவசாயம் செய்யும் விவசாயிகளில் பெரும்பாலோர் வன்னியகுல மக்களும், தாழ்த்தப்பட்ட மக்களும் ஆவர். இந்த மக்களின் வாழ்வில் வறுமைதான் தாண்டவமாடுகிறது. இவர்கள் வாழ்வை உயர்த்த வேண்டிய சர்க்கார், எங்கோ கட்டப்படும் பெரிய அணைகள் பலவற்றை நம்மிடம் காட்டுவதோடு திருப்தியடைகிறது. ஆனால், இந்நாட்டிலே உள்ள விவசாயிகள் பெரும்பாலோர், ஏரி, குளம், குட்டை ஆகியவற்றை மட்டுமே நம்பி வாழுகின்றனர்.

"இந்த சர்க்கார் விவசாயிகளுக்கு கடன் கொடுத்து உதவுவதாகக் கூறுகிறது; ஆனால் இந்தக் கடன்கள் பெரும்பாலும், பெருநிலக்கிழார்களுக்கு மட்டுமே பயன்படுகிறதே ஒழிய சாதாரண விவசாயிகளுக்குக் கடன் கிடைப்பது மிக அபூர்வமாய் இருக்கிறது.

"என்னுடைய தொகுதியான திருவண்ணாமலையில், ஆற்றுநீர் வசதி கிடையாது. ஆனால், அங்குள்ள விவசாயிகள் அப்பகுதியில் உள்ள ஐந்து ஏரிகளை நம்பி விவசாயம் செய்கின்றனர். இந்த நிலையில் உள்ள அந்த ஏரிகளில் மழை பெய்தால் மட்டுமே நீர் தேங்கி நிற்கும். இந்த ஏரிகளில் மழைத் தண்ணீர் வந்து சேரும் போது, மண்ணும் வந்து சேர்ந்து தூர்த்துவிடுகிறது. இதனால் தண்ணீர் ஆறு மாதங்கள் மட்டுமே விவசாயத்திற்குப் பயன்படுகிறது. இதனால் விவசாயம் மற்ற ஆறு மாதங்களுக்குப் பாதிக்கப்படுகிறது. ஆகவே, அவற்றைப் பழுது பார்க்கவேண்டும். இதனால் சிறு விவசாயிகள் பலன் பெறுவர்.

"வட்டார அபிவிருத்தித் திட்டத்தின்கீழ், பாதை அமைத்தல், சுகாதார அபிவிருத்தி ஆகியவை பெரும்பாலும் சாதி இந்துக்கள் வசிக்கும் பகுதிகளில் மட்டுமே செய்யப்படுகிறது. தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கும் சேரிப் பகுதிகள் புறக்கணிக்கப்படுகின்றன. இதனால் சாதி இந்துக்களுக்கும், தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் இடையே இடைவெளி அதிகமாகிறது.

"உள்நாட்டு, குளம், ஏரி, ஆறுகளில் மீன் பிடிக்கும் மீனவர்களுக்கு சிறு வலைகளை சர்க்கார் அளித்து உதவவேண்டும்."

### எம். பி. சுப்பிரமணியம்

தோழர் எம். பி. சுப்பிரமணியம் அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் விவசாயத்திற்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவத்தைப்போல், இரண்டாவதுதிட்டத்தில் உணவு உற்பத்தியில் பிரதான கவனம், சர்க்காரால் செலுத்தப்படவேண்டும் என்பதை குறிப்பிட விரும்புகிறேன்.

"எனது தொகுதியான ஆத்தூர் வட்டாரத்தில் விவசாயம் சரியானபடி நடைபெறவில்லை. காரணம், அங்குள்ள நிலங்களில் பெரும்பாகம் நில அரிப்பால் மண்வளம் கெட்டுப் பாழாகிறது. மண் அரிப்பைத் தடுக்க சர்க்கார் ரூ. 32 லட்சம் மட்டுமே ஒதுக்கியுள்ளது. சர்க்காருடைய விவசாயக் கொள்கை 'இலாபமும் வேண்டாம்—நஷ்டமும் வேண்டாம்,' என்ற முறையில் இருக்கிறது. 'டிராக்டர்' மூலம் உழுதால் முன்பு ஏக்கருக்கு ரூ. 7 என்று இருந்த வாடகை தற்பொழுது ரூ. 12 ஆக உயர்த்தப்பட்டுள்ளது. இதனால், விவசாயிகளுக்கு உற்பத்தி செலவு உயர்ந்து விடுகிறது.

"கிணறு வெட்ட மானியம் கொடுக்கப்பட்டு வந்தது நிறுத்தப்பட்டு, தற்பொழுது தக்காவி கடன் மூலமே கிணறுகள் வெட்டிக்கொள்ள வேண்டும் என்று கூறப்படுகிறது. இதனால், விவசாயிகள் பாதிக்கப்படுகிறார்கள்.

"சிறு நில விவசாயிகளுக்குக் கடன் தரப்படும்போது, நிலங்களின் 1920-ம் வருட மதிப்பை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு அதில் பாதித் தொகை மட்டுமே கடனாகத் தரப்படுகிறது. இதை சர்க்கார், 1939-ம் வருட நில விலை மதிப்பை வைத்து கடன் தர வேண்டும்.

"சர்க்கார் விதைப் பண்ணைகள் நடத்த ரூ. 6 இலட்சத்து 37 ஆயிரம் ஒதுக்கப்பட்டுள்ளது. இந்த விதைப் பண்ணைகள் நல்ல வளமுள்ள இடங்களில் ஏற்படுத்தப்பட வேண்டும். விதைகளில் கலப்பு ஏற்படாமல் கவனித்துக் கொள்ள வேண்டும். இந்தப் பொறுக்கு விதைகளை விவசாயிகள் பயன் பயன்படுத்தச் செய்ய பிரசாரம் அவசியம். விதைகளை நல்ல முறையில் பாதுகாக்க வேண்டும்.

"விவசாயம் இன்னும் பழைய முறை பாணியிலேயே நடைபெறுகிறது. மிக நவீன முறையில் இல்லாவிட்டாலும் சில குறிப்பிட்ட காரியங்களுக்கு விஞ்ஞான முறையைப் பயன்படுத்த வேண்டும்.

"ஒசூர் கால் நடைப் பண்ணையில் உள்ள காளைகள் காங்கேயம் காளைகளைப்போல் நல்ல முறையில் இல்லை. இதை சர்க்கார் பரிசீலனை செய்யவேண்டும்.

"கிராமப் பகுதிகளில் பாதைகள் அமைக்கப்படும்போது, நிலக் கொள்முதல் செய்வது தாமதமாவதால் அந்த அதிகாரத்தைக் கலெக்டருக்கு அளிக்கவேண்டும். இதன் மூலம், தாமதமின்றி நிலக் கொள்முதல் நடைபெறும்.

சென்னை, ஜூலை 20—

1956—57-ம் ஆண்டில் நிறுவப்பட்ட 9 கோழி வளர்ப்பு நிலயங்கள் தொடர்ந்து நடைபெறுவதற்கு அரசாங்கம் ரூ. 1,90,100 வழங்கியுள்ளது. இவ்வாண்டில் மேலும் நான்கு நிலயங்கள் நிறுவுவதற்காக ரூ. 87,100 வழங்கியுள்ளது.

# தெலுங்கன்குடிக்காடு சம்பவம்

## எதிரிகள் போலீசில் சரண்

ஒரத்தநாடு, ஜூலை 18—

தெலுங்கன் குடிக்காடு தி. மு. கழகத் தோழர்கள் தாக்கப்பட்ட சம்பவம் முன்னர் பிரசுரிக்கப்பட்டிருந்தது. மேற்படி கிளைக் கழகத் தோழர்கள் பொதுக்கூட்டம் ஒன்று நடத்தியதின் விளைவாக கிளைக் கழகச் செயலாளர் தோழர் உலகப்பன் அவர்கள் படுகாயப்படுத்தப்பட்டார். அவர் அன்றையக் கூட்டத்தில் கலந்து கொண்ட தோழர்கள் என். வி. நடராசன், என். எஸ். இளங்கோ முதலியவர்களை பஸ் ஏற்றிவிட வந்த சமயம், இரவு 8-30 மணியளவில் தாக்கி படுகாயம் விளைவித்ததுடன், ஒரு 'பெட்ரோமாக்ஸ்' விளக்கையும் தடி கொண்டு தாக்கி சேதப்படுத்தி எடுத்துச சென்றுவிட்டனர்.

இதன்மேல் ஒரத்தநாடு போலீசார் விசாரணை செய்து வழக்கு ஒன்றை இ. பி. கோ. 323, 341 ஆகிய பிரிவுகளின்கீழ் பதிவு செய்து 'பிடிவாரண்ட்' ஒன்றைப் பெற்றனர்.

எதிரிகள் தலைமறைவாகி பின்னர் பட்டுக்கோட்டை சப்-மாஜிஸ்திரேட் கோர்ட்டில் சரணடைந்திருக்கின்றனர். அவர்களாவன:—கு. வைத்திலிங்க சேதுரார், கு. வெள்ளசாமி, கு. அப்பாவு சேதுரார்ஆவர். அவர்கள் பட்டுக்கோட்டை சப்-மாஜிஸ்திரேட் ஜாமீனில் விடுதலை செய்துள்ளார். கூடிய சீக்கிரம் ஒரத்தநாடு சப்-மாஜிஸ்திரேட் அவர்களால் வழக்கு எடுத்துக் கொள்ளப்படும் என்று தெரிகிறது.

மேலும், அதே நாளில் இதே பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்ட ஒரங்கிரான் குடிகாடு தோழர்கள் சிலரை வேறு பகுதியில் தாக்கிப் படுகாயம் விளைவித்திருக்கிற வேறு சிலர் மீது இ. பி. கோ. 323, 341 ஆகிய பிரிவுகளின் மீது தனி வழக்குப் பதிவு செய்து 'வாரண்ட்' பெற்றிருப்பதாகத் தெரிகிறது. இந்த எதிரிகள் நால்வர் இன்றுவரை தலைமறைவாகியிருக்கின்றனர்.

# சட்டசபையில் 'பொய்ப் பிரச்சாரம்'!

சென்னை, ஜூலை 20—

இன்று (19—7—57) தாழ்த்தப்பட்டோர் நல இலாகா செலவு மானியக் கோரிக்கையைப் பிரேபித்து அமைச்சர் பக்தவத்சலம் பேசினார்.

அதன்மீது ஒரு வெட்டுப் பிரேரணையைக் கொண்டுவந்து கழக உறுப்பினர் தோழியர் சத்தியவாணிமுத்து அவர்கள் பேசினார். அவருக்குப் பின் பேசிய காங்கிரஸ் உறுப்பினர் திரு. மணவாளன் அவர்கள், "எதிர்க் கட்சிக்காரர்கள் தேர்தல் காலத்தில் தாழ்த்தப்பட்ட மக்களிடத்தில் 'பொய்ப் பிரச்சாரம்' செய்தனர்" என்று குறிப்பிட்டுப் பேசினார்.

அப்பொழுது தி. மு. கழக சட்டமன்ற செயலாளர் தோழர் ஏ. கோவிந்தசாமி அவர்கள் ஒரு ஒழுங்குப் பிரச்சினையைக் கிளப்பினார்.

தோழர் ஏ. கோவிந்தசாமி:— "உறுப்பினரவர்கள் சபையில் 'பொய்ப் பிரச்சாரம்' என்று குறிப்பிடலாமா?

சபாநாயகர்:— "பொய்ப்பிரச்சாரம் என்று கூறக்கூடாதுதான்; இருந்தாலும், எல்லா உறுப்பினர்களும் இப்படிப் பேசிப் பழகிவிட்ட காரணத்தால் உடனே மாறுவது கொஞ்சம் கடினம் தான்; இருந்தாலும், 'பொய்ப் பிரச்சாரம்' என்ற வார்த்தையை உபயோகப்படுத்தக் கூடாது."

ஜெகன்னாதன் (கா. சீ. க.):— "கனம் உறுப்பினர், அடிக்கடி 'பொய்ப்பிரச்சாரம்' என்று உபயோகப்படுத்திப் பழகிவிட்டபடியால், இனி சபையில் அவ்வார்த்தையை பயன்படுத்த சபாநாயகர் அனுமதிப்பாரா?"

சபாநாயகர்:— "உபயோகப்படுத்தப்படும் வார்த்தை சபையின் கௌரவத்தைப் பாதிக்கப்படாமலும், உறுப்பினர்களின் மனதைப் புண்படுத்தப்படாமலும் இருக்க வேண்டும். அந்த முறையில், இந்த வார்த்தையை உபயோகிப்பதை அனுமதிக்க முடியாது."

# 4,75,00,000 டன் இரும்புத் தாதுப்பொருள்

## சேலத்தில் இருக்கிறதாம்

"சேலம் மாவட்டத்தில் அரூர் தாலுகாவில் சுமார் 4 கோடி 75 இலட்சம் டன் இரும்புத் தாதுப் பொருள் இருப்பதாக மதிப்பிடப்பட்டுள்ளது. என்று மக்கள் சபையில் கேள்வி நேரத்தின்போது இயற்கை வள அமைச்சர் மாளவியா தெரிவித்துள்ளார்.

# நியாயவாரச் சட்டம்: அமுல்செய்யக் கோரி விவசாயிகள் போராட்டம்

## இதுவரை 20 பேர் கைது

### மந்திரியின் பொறுப்பற்ற பதிலுக்கு மு. கருணாநிதி கண்டனம்

“60—40 என்ற சட்டம், ‘மகசூலில் விவசாயிகளுக்கு 60 பங்கு—நிலப் பிரபுவுக்கு 40 பங்கு’ என்று விதிக்கிறது; கேட்பதற்கு இனிக்கத்தான் செய்கிறது; ஆனால், இந்தச் சட்டம் இன்று சரிவர அமுல் செய்யப்படவில்லை, நடைமுறையில்!

“இந்தச் சட்டத்தில் இருந்த ஓட்டைகளைக்காட்டி, உயர்நீதி மன்றத் தீர்ப்பையும் பெற்றுக்கொண்ட நிலப்பிரபுக்கள், எங்கள் குளித்தலைத் தொகுதியில் இந்தச் சட்டத்தைத் துச்சமென மதிக்கிறார்கள்.

“இன்றும், ‘நீ கூலிக்காரன்தான்; விவசாயி அல்ல’ என்று, ‘மூச்சலிக்கா’ என்ற முறிச்சீட்டில் கையொப்பமிட்டால்தான் விவசாயிகளை நிலத்தில் இறங்க அனுமதிக்கிறார்கள்; இந்தக் கொடுமை குறித்து நான் சட்டசபையில் கேட்டேன்.

“கனம் மந்திரி பக்தவத்சலம் ‘கருணாநிதியே மிராசுதார்களிடம் பேசி, இதற்கு ஒரு பரிகாரம் காணவேண்டுகிறேன்’ என்று கூறினார்.

“நான் போய், இந்த தகராறைத் தீர்த்துவைக்க வேண்டும் என்றால், இவர் எதற்காக மந்திரியாக இருக்கவேண்டும்?

சென்ற கிழமை, நிலப் பிரபுக்களின் இந்தக் கொடுமைக்கு எதிராகத் திரண்ட விவசாயிகளில் எட்டுப் பேர்களைப் போலீசார் கைது செய்திருக்கின்றனர்.

“நேற்று இரவு மேலும் பன்னிரண்டு விவசாயிகளும், பத்து எருமை மாடுகளும் கைது செய்யப்பட்டதாக எனக்குத் தகவல் வந்தது. விவசாயிகள் குமுறுகிறார்கள்; மந்திரியோ, பொறுப்பற்ற போக்கில், இந்தப் பெரும் பிரச்சினையை அலட்சியமாகக் கருதுகிறார்.

நான் கடந்த வாரம் குளித்தலை சென்றிருந்தபோது, பல்லாயிரம விவசாயிகளடங்கிய கூட்டத்திலேயே கூறினேன்—‘சர்க்கார், இந்த நியாயவாரச் சட்டத்தைச் சரிவர அமுல் செய்யாமல் இருந்தால்—இப்போதைய நிலை நீடித்தால் விவசாயிகள் போர்க்களம் புகுவர்; அப்போது எனக்கு ஏர் பிடிக்கத் தெரியாவிடினும்—நானும் அந்தப் போராட்டத்தில் கலந்துகொண்டு, நிலப்பிரபுக்களின் கொடுமைக்கு எதிராக நிலத்தில் இறங்கத் தயங்க மாட்டேன்’—என்று!

“இப்போது நிலைமை முற்றிக்கொண்டு வருகிறது; இந்த நிலை நீடித்தால் குளித்தலையில் குறிப்பிட்டமாதிரி, அடுத்த சட்டசபைக் கூட்டம் ஆரம்பிக்கும்போது நான், சிறைச்சாலையில் இருக்க வேண்டி வரலாம் என்றும் கூற விரும்புகிறேன்”

—என்று, தோழர் மு. கருணாநிதி அவர்கள், 21—7—57 அன்று மைலாப்பூர் உதய சூரியன் படிப்பகத் துவக்க விழாப் பொதுக் கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டார்கள்.

தொடர்ந்து பேசிய மு. கருணாநிதி அவர்கள், சட்ட மன்ற நடவடிக்கைகளை விவரித்தும், கேள்விகளுக்கு மந்திரிகள் சரியான பதிலளிக்காமல் மழுப்பி விடுகிற பொறுப்பற்ற போக்கு குறித்தும், சட்ட சபையில் நமது கழகம் ஆற்றிவரும் பணிகுறித்தும் விரிவான விளக்கம் தந்தார்.

## திட்டங்களை முடிக்கத் திண்டாட்டம்?

டில்லி அனுமதிக்கும் நிலைமையைப் பொறுத்துத்தான் உள்ளதாம்!

சென்னை, ஜூலை 17—

சென்னை மாநிலத்தில் 5 முக்கிய மின்சாரத் திட்டங்களை அமுல் நடத்துவதில் அரசாங்கத்திற்கு எதிர்பார்த்த இடுக்கண்கள் ஏற்பட்டுள்ளன என்று தெரிய வருகிறது.

இந்தத்திட்டங்களுக்குத்தேவையாக துணைக் கருவிகள் வெளிநாட்டில் இருந்து இறக்குமதி செய்ய வேண்டும்; ஆனால், அந்நிய செலாவணியில் பற்றாக்குறை உள்ளதாம்.

‘மத்திய அரசாங்கம் எந்த அளவிற்கு அந்நிய செலாவணியை அனுமதிக்கிறதோ அதைப் பொறுத்துத்தான் திட்டத்தின் முடிவு பற்றி மதிப்பிட முடியும்’ என்று சட்டசபையில் மின்சார இலாகா அமைச்சர் இராமய்யா தெரிவித்துள்ளார்.

# நேருவுக்குப் பிறகு யார்?

## ஜெயப்பிரகாஷ் நாராயண் டில்லி சர்க்காரில் சேருவாரா?

ஜெயப்பிரகாஷ் நாராயணனை, சர்க்காரில் பொறுப்பேற்கு மாறு பண்டித நேரு கேட்டிருப்பதாக புதுடில்லி அரசியல் வட்டாரங்களில் பலமான வதந்திகள் உலவுகின்றனவாம்.

எந்தப் பொறுப்பு ஜெயப்பிரகாசுக்குத் தரப்படும் என்று இந்த வட்டாரங்களுக்கு இன்னும், தெரியவில்லையாம்!

‘மக்களிடத்தில் காங்கிரஸ் நிலைபெற வேண்டும்’ என்ற கவலை, பண்டிதரை வாட்டுகிறதாம்! அதற்காக புதிய இரத்தம் பாய்ச்சவேண்டியது அவசியமென அவர் கருதுகிறாராம்!

காங்கிரசுத் தலைவர், நடைபெற்ற பொதுத் தேர்தல் குறித்து ஆய்ந்து தந்துள்ள இரகசிய அறிக்கையில், ‘காங்கிரஸ் மக்களிடத்தில் செல்வாக்கை இழந்துவருகிறது’ என்ற உண்மை தெளிவாக்கப்பட்டிருக்கிறதாம்!

இதனால், ஜெயப்பிரகாசை சர்க்காரில் சேர்த்துக்கொள்வது, தங்கள் நிலையைப் பலப்படுத்தும் என்று காங்கிரஸ் தலைமை கருதுகிறதாம்!

மேலும், ‘பண்டிதருக்குப் பிறகு யார்?’ என்ற கேள்விக்கும், பண்டிதர், ஜெயப்பிரகாசை அழைத்திருப்பதற்கும் நிரம்பத் தொடர்பு இருப்பதாகவும் டில்லி வட்டாரங்கள் கூறுகின்றனவாம்!

ஏனெனில், நெடுங்காலம், ‘பண்டிதரின் இடத்திற்கு ஜெயப்பிரகாஷ்தான்’ என்று கூறப்பட்டுவந்திருக்கிறது!

இந்தத் தகவல்கள் பற்றி டில்லிப்பெரியவர்கள், மிகப் பாதுகாப்பாக, மௌனம் சாதித்து வருகிறார்கள் என்றும் தெரியவருகிறது!

# அசாம் மாநிலம் எங்கும் ஆர்ப்பாட்டம்!

## மாணவர்கள் முன்னணியில்!

### டெல்லியில் காங்கிரஸ் தூதுக்குழு

எண்ணெய்த் தொழிற்சாலைப் போராட்டம் வலுக்கிறது

கடந்த ஜூலை 19-ந் தேதியன்று அசாம் மாநிலம் எங்கும், ‘எண்ணெய்த் தொழிற்சாலையை பீகாரில் நிறுவுவது’ என்ற டில்லியின் முடிவுக்கு எதிராக எதிர்ப்பு நாள் கொண்டாடப்பட்டிருக்கிறது.

அசாமில் எண்ணெய்த் தொழிற்சாலை வேண்டும்; ‘அசாம் காங்கிரஸ் ஒழிக’ போன்ற கோஷங்களுடன் ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்கள் நடைபெற்றிருக்கின்றன.

மாணவர்கள், இந்த ஆர்ப்பாட்டங்களில் பெரும் பங்கு பற்றியிருக்கின்றனர். அன்று பள்ளிகளுக்கும், கல்லூரிகளுக்கும் செல்லாமலிருந்து ஆர்ப்பாட்டங்களில் கலந்துகொண்டிருக்கின்றனர்.

ஷில்லாங் நகரின் முக்கிய வீதிகள் வழியாக ஊர்வலம் வந்த மாணவர் பட்டாளம், சர்க்கார் அலுவலகத்தின் முன்கூடி ஆர்ப்பாட்டம் நடத்தியிருக்கிறது.

#### தூதுக்குழு

டில்லி செல்லும் காங்கிரஸ் தூதுக்குழு, ‘அசாமில் தொழிற்சாலை நிறுவ டில்லி சர்க்கார் சம்மதிக்காவிட்டால், மந்திரிசபை இராஜிநாமாச் செய்வதற்கு, மேலிடம் அனுமதிக்க வேண்டும்’ என்று கோரப்படும் எனவும் தெரியவருகிறது.

#### புதுடில்லியில்

புதுடில்லி வந்துள்ள அசாம் காங்கிரஸ் தூதுக்குழுவின் தலைவரான முதன் மந்திரி பிஷ்ணுராம் மெதி பத்திரிகையாளரிடம் பேசுகையில் ‘உத்தேசத் தொழிற்சாலையை தனிப்பட்ட பிரிட்டிஷ் முதலாளிகள் துவங்குவதற்கு அனுமதிக்கக்கூடாது; சர்க்காரே நடத்தவேண்டும்’ என்றும், ‘அசாமுக்கு வெளியே பிரிட்டிஷ் கம்பெனி உத்தேசத் தொழிற்சாலையை நிறுவவேண்டும் என்பதற்குக் காரணம், அவர்கள் தொழிற்சாலையின் உற்பத்தியை ஏற்றுமதி செய்ய விரும்புவதுதான்’ என்றும் கூறியிருக்கிறார்.

‘அசாமில் தொழிற்சாலையை இலாபகரமாகவும், சிக்கனமாகவும் நடத்தமுடியும் என்பதை எங்களால் நிரூபிக்கமுடியும்’ என்றும் அவர் கூறியிருக்கிறார்.

## வட சென்னை தொகுதி தேர்தல் வழக்கு

வட சென்னைத் தொகுதி தேர்தல் வழக்கு 23—7—57 காலை 11 மணிக்கு சென்னை உயர்நீதி மன்றத்தில் ‘ஸ்மால்காஸ் கோர்ட்’ தலைமை நீதிபதி முன்னிலையில் நடைபெறும்.

## மதுரையில் ஒரு பைத்தியக்கார மருத்துவமனை

சென்னை, ஜூலை 20—

மதுரையில் ஒரு பைத்தியக்கார மருத்துவமனை துவக்குவது, மன நோய் கொண்ட கைதிகளை அடைப்பதற்கென ஒரு தனிச் சிறைக்கூடம் நிறுவுவது, ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்த கிரிமினல் மற்றும் சிவில் மனநோயாளிகளை அந்த மாநிலத்திற்கு மாற்றுவது இவை எல்லாம் சர்க்கார் பரிசீலனையிலிருப்பதாக மந்திரி மாணிக்கவேலர் சட்டசபையில் தெரிவித்திருக்கிறார்.

கடந்த மார்ச் திங்களில்தான் சென்னை பைத்தியக்கார மருத்துவமனை விரிவுபடுத்தப்பட்டது என்றும், முன்பு 888 பேர்களுக்கே இடமிருந்தது—இப்போது 1,800 பேருக்கு இடமிருக்கிறது என்றும், இதற்காக சர்க்கார் ரூ. 74,900 செலவிட்டனர் என்றும் மந்திரி கூறியிருக்கிறார்.

## ‘தக்காவி’ கடன் தருகிறார்களாம்!

சென்னை, ஜூலை 19—

மதுரை மாவட்டத்தில் உள்ள கிராமதான நிலங்களின் அபிவிருத்தி பற்றி சிபாரிசுகள் செய்யவும், அவற்றின் விவரங்களை தெளிவு செய்யவும் மதுரை மாவட்ட கலெக்டருக்கு அரசாங்கம் உத்திரவிட்டுள்ளதாம்.

அவர் தலைமையில் தமிழ் நாடு சர்வோதய இயக்கப் பிரதிநிதிகள் அடங்கிய குழு ஒன்று அமைக்கப்பட்டு, அந்தக் குழுவின் முடிவுகளைக் கொண்டு அந்தக் கிராமங்களின் விவசாயிகளுக்கு ரூ. 20 இலட்சம் வரையில் ‘தக்காவி’ கடனாக அரசாங்கம் தந்துள்ளதாம்.

கூட்டுறவு நிறுவனத்தின் மூலம் விவசாயம் நடத்துவதே அரசாங்கத்தின் நோக்கம் என்றும் இதைப்போன்று எல்லா மாவட்டங்களுக்கும் கடன் உதவி தரப்படும் என்றும் சட்டசபையில் நிதி அமைச்சர் அறிவித்தார்.

## நடவடிக்கை எடுக்க இயலாதாம்!

சென்னை, ஜூலை 22—

புதிய நாணய முறை அமுல் செய்யப்பட்டதை ஒட்டி சில வியாபாரிகள், பொருள்களின் விலையை சற்று உயர்த்தியது உண்மைதான் என்றும், ஆனால் இந்த விலை உயர்வைத் தடுக்க நடவடிக்கை ஏதும் எடுப்பதற்கில்லை என்றும் மந்திரி சுப்பிரமணியம் சட்டசபையில் கேள்வி நேரத்தில் கூறியிருக்கிறார்.

## கேரளத்திற்கு டெல்லியின் யோசனை

திருவனந்தபுரம், ஜூலை 18—

கேரளத்தின் இப்போதைய சர்க்கார் மதுவிலக்குக் கொள்கைக்கு எதிரானது அல்ல என்றும், இப்போது அமுலாகிவரும் மதுவிலக்குச் சட்டத்தை ரத்து செய்யும் நோக்கம் சர்க்காருக்கு இல்லை என்றும் மந்திரி திருமதி கே. ஆர். கௌரி கேரள சட்ட சபையில் தெரிவித்திருக்கிறார்.

மாறாக இந்தப் பிரச்சினையை, பிரத்தியட்சமான விஞ்ஞானக் கண்ணோட்டத்துடன் அணுக சர்க்கார் உத்தேசித்திருக்கிறது; இப்போது விவரங்கள் சேகரிக்கப்பட்டு வருகின்றன. அவை சபையின் முன் வைக்கப்படும்போது இது குறித்து விவாதித்துக் கொள்கை வகுக்கலாம் என்றும் அந்த மந்திரி கூறியிருக்கிறார்.

‘இரண்டாம் திட்டத்திற்கு நிதி கிடைப்பதில் இருக்கும் கஷ்டத்தினால், கேரள சர்க்கார், எஞ்சியுள்ள பகுதிகளில் மதுவிலக்கை சாவதானமாக அமுல் செய்யும் கொள்கையைக் கடைபிடிக்க வேண்டும்’, என்று டெல்லி சர்க்கார் யோசனை கூறியிருப்பதாகவும் அந்த மந்திரி தெரிவித்திருக்கிறார்.

## பக்தர்களுக்கு விஞ்ஞானம் உதவுகிறது

### ஏழுமலையான் கோயிலில் ‘ஏர்கண்டிஷன்’

சென்னை, ஜூலை 20—

திருப்பதி ஏழுமலையானின் கோயிலின் தங்க வாசலிலிருந்து இருபுறங்களிலும் நூதனமாக இரு மின்சார விசிறிகள் பொறிக்கப்பட்டுள்ளதாம்!

இதுவரை ஆண்டவனை வணங்க செல்லும் பக்தர்களுக்கு ஏற்பட்ட புழுக்கம் இதனால் தவிர்க்கப்பட்டுள்ளதாம்!

இந்த ஏற்பாட்டிற்கு ரூபாய் 12,000 செலவிடப்பட்டதாம். மேலும், கற்பூரப் புகையையும் ஒரு குழாயின்மூலம் அப்புறப்படுத்தவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதாம்.

## அம்பையில் ஒரு காகிதத் தொழிற்சாலை!

அம்பா சமுத்திரம் தாலுகாவில் (திருநெல்வேலி மாவட்டம்) ஒரு காகித உற்பத்தித் தொழிற்சாலையைத் துவக்குவதற்கு தனிப்பட்ட தொழிலதிபர் ஒருவருக்கு ‘லைசென்சு’ தரப்பட்டிருப்பதாக மந்திரி வெங்கட்ராமன் சட்டசபையில் தெரிவித்திருக்கிறார்.

மேட்டூரில் ஒரு காகிதத் தொழிற்சாலை அமைக்க ஒரு தொழிலதிபர் கேட்டுள்ள அனுமதி குறித்து டில்லி சர்க்கார் பரிசீலித்து வருகிறார்கள் என்றார், மந்திரி கேள்விக்குப் பதிலளிக்கையில் கூறியுள்ளார்.

## திருத்தம்

18—7—57 ‘நம் நாடு’ இதழில் 3-ம் பக்க 2-வது கலத்தில், தோழர் எஸ். எம். அண்ணமலை எம். எல். ஏ. அவர்களின் உரையில், (3-ம் பத்தியில்) ‘1950-ல்’ என்றிருப்பதை ‘1953-54-ல்’ என்றும், ‘நான் போட்டி சர்க்கார் நடத்த முயற்சிப்பதாக,’ என்றிருப்பதை ‘நடத்தியதாக’ எனவும் திருத்தி வாசித்துக் கொள்ளக்கோருகிறோம். (ஆ—ர்.)

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: இரா நெடுஞ்

